ஓம் தத்ஸத்பிரஹ்மணே நம:

சாந்தோக்கியத்தில்

ஒன்பதுமுறை சொல்லப்பட்டிருக்கும்

# தத்துவமஸிமகாவாக்கிய உபதேசம்

நான்குமகாவாக்கியார்த்தத்துடன்.

இவை

தஞ்சை ஸ்ரீபிரஹ்மநிஷ்டபண்டித

வே. தப்புஸ்வாமிமஹாராஜ் என்னும்

பூர்வாசிரமநாமம்பூண்டிருந்த

ஸ்ரீ வி. பிரஹ்மாநந்தஸ்வாமிகளால்

இயற்றப்பட்டு,

தஞ்சை ஸ்ரீசங்கரவிலாசசாரதாமந்திர பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

மூன்றும் பதிப்பு.

ருதிரோத்காரி-வரு அற்பிசி-மீ



விலை] 1923. [அணா ந.

உ

ஓம் தத்ஸத்பிரஹ்மணே நம:

சாந்தோக்கியத்தில்

ஒன்பதுமுறை சொல்லப்பட்டிருக்கும்

# தத்துவமஸிமகாவாக்கிய உபதேசம்

நான்குமகாவாக்கியார்த்தத்துடன்.



இவை

தஞ்சை ஸ்ரீபிரஹ்மநிஷ்டபண்டித

வே. குப்புஸ்வாமிமஹராஜ் என்னும்

பூர்வாசிரமநாமம்பூண்டிருந்த

ஸ்ரீ வி. பிரஹ்மாநந்தஸ்வாமிகளால்

இயற்றப்பட்டு,

தஞ்சை ஸ்ரீசங்கரவிலாசசாரதாமந்திர பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

மூன்றாம் பதிப்பு.

ருத்திரோத்காரி-ஹூ அற்பிசி-மீ



விலை] 1923. [அணா ௩.



ஸ்ரீபிரஹ்மநிஷ்டபண்டித வெ. குப்புஸ்வாமிமஹராஜ்
என்னும் பூர்வாசிரமநாமம்பூண்டிருந்த
**ஸ்ரீவி. பிரஹ்மாநந்தஸ்வாமிகள்.**

முதற்பதிப்பின்

# முகவுரை.



தூலசரீரத்தில் வாதம் பித்தம் கப மென்னும் பேதத்தால் மூன்று தோஷங்கள் இருக்கின்றன. அவை ரோகத்திற்குக் காரணமாம். அவற்றை நிவர்த்திக்கும்பொருட்டுத் தன்வந்திரியானவர் ஆயுள்வேதத்தைச் செய்திருக்கின்றார். அதுபோலவே அந்தக்கரணத்தில் மலம், விக்ஷேபம், ஆவரணமென்னும்பேதத்தால் மூன்று தோஷங்க ளிருக்கின்றன. அவை சம்சாரத்திற்குக் காரணமாம். அவற்றை நிவர்த்திக்கும்பொருட்டு ஸ்ரீசச்சிதாநந்தபரமகாருண்ணிகராகிய பரமேசுவரன் நான்கு வேதங்களையும் அக்கினியினின்றும் புகையுண்டாதல்போல அல்லது நிசுவாசம்போல அநாயாசமாகப் பிரகடமாக்கினார். அவற்றுள், கர்மகாண்டம் உபாசனகாண்டம் ஞானகாண்டமென மூன்று காண்டங்களிருக்கின்றன. மல மென்னும் பாபத்தின் நிவிருத்தி கர்மகாண்டத்திற் கூறிய கர்மாநுஷ்டானத்தாலுண்டாகிறது. விக்ஷேபமென்னும் சஞ்சலத்தன்மை

யின் நிவிருத்தி உபாஸனாகாண்டத்திற் கூறிய சகுண நிர்க்குணவுபாசனையா லுண்டாகின்றது. ஆவரணமென்னும் அஞ்ஞானத்தின் நிவிருத்தி ஞானகாண்டத்திற்கூறிய பிரஹ்மத்தின் வேறாகாத ஆத்மாவின் ஞானத்தா லுண்டாகின்றது. ஆதலால் இப்பிறப்பிலேனும் முற்பிறப்பிலேனும் செய்த கர்மஉபாசனைகளால் எவனுக்கு மலவிக்ஷேபங்கள் நீங்கி யிருக்கின்றனவோ, இதனாலேயே எவன் விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்துவ மென்னும், நான்கு சாதனங்களையும் அடைந்திருக்கின்றானோ, எவனுக்கு ஆவரணதோஷமாத்திரஞ் சேடமாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட அதிகாரியானவன் உபநிஷத்தாகிய ஞானகாண்டத்தைப் பிரஹ்மநிஷ்டகுருவாயிலாகச் சிரவணஞ்செய்து, சிரவணஞ் செய்த அந்தப் பிரஹ்மாத்ம ஐக்கியமாகிய அர்த்தத்தை மனனநிதித்தியாசனஞ் செய்து, சொரூபசாக்ஷாத்காரத்தால் சகல அநர்த்தங்களின் நிவிருத்தியும் பரமாநந்தப்பிராப்தியுமாகிய மோக்ஷத்தை யடைகின்றான்.

அவ்வுபநிஷத்துக்கள் அநேகமாயினும், அவற்

றுள் முக்கியமானவை பத்தாம். அப்பத்திலும் நான்கு உபநிடதங்களிற் கூறியுள்ள நான்கு மகாவாக்கியங்களே சாரமாம். அவற்றிலும் சாமவேதத்தின் சாந்தோக்கியவுபநிஷத்தின் ஆறுவது பிரபாடகத்தின் ஏழாவது கண்டமுதல் இவ்வத்தியாயத்தின் கடைசிக்கண்டமாகிய பதினாறுவது கண்டம்வரையில் நாநாவித யுக்திகளுடன் ஒன்பது முறை யுபதேசிக்கப்பட்டிருக்கும் "தத்துவமஸி" மகாவாக்கியமே சாரதரமாம். அது வடமொழியில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியர்களது பாஷியம் ஸ்ரீ ஆநந்தஞானரது வியாக்கியானமுதலியவற்றோடு அதிவிஸ்தாரமா யிருக்கின்றது. அதுவும் வடமொழியில் மிகத்தேர்ந்தவர்களுக்கேயன்றி மற்றையோர்களுக்குபயோகப்படாததாதலின் வடமொழித்தேர்ச்சியில்லாதவர்களும், அவ்வுபநிடதங்களை நேரே பார்க்க அதிகாரமில்லாதவர்களுமாகிய முமுக்ஷுக்களுக்குபயோகமாகும்வண்ணம் பாஷியத்தையும் வியாக்கியானத்தையு மநுசரித்து மூலசுருதி முழுவதும் தமிழிற் செய்யப்பட்டது. அதனோடு பாஷியாதிகளிலுள்ள முமுக்ஷுக்களுக்குபயோகமான சிலவிஷயங்களுமெழு

தப்பட்டிருக்கின்றன. இவ்வொன்ப துபதேசங்களும் மூலசுருதியிற் கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும் முறையே ஈண்டும் பிரிக்கப்பட்டுள்ளன.

ஒன்பதுமுறை கூறிய இவ்வுபதேசத்தின் அர்த்தம் சித்தசுத்தியும் ஏகாக்கிரமு முள்ளவர்களுக்கே யன்றி மற்றையோர்களுக்கு விளங்காது. அச்சித்தசுத்தியும் ஏகாக்கிரமு முண்டாதற்கு அநேக சாதனங்களிருந்தாலும் இக்கலியில் நாமோச்சாரணமே மேலான சாதன மென்று சுருதியாதிகள் கூறுவது பிரசித்தம். ஆதலால் ஆஸ்திகர்களாவார் மேற்சொல்லப்படும் பத்தபராதங்களையும் நீக்கி ஈசுவரநாமத்தை யுச்சரித்தலோடு அதன் அர்த்தத்தையும் நியதமாய்ச் சிந்திக்க வேண்டும்.

பத்தபராதங்கள்:—"(க)சாதுக்கள் நிந்தை, (உ) அசாதுக்களிடத்து நாமத்தின் மகிமையைக் கூறுதல், (ந) சிவவிஷ்ணுக்களிடத்துப் பேதபுத்தி, (ச) சுருதி வாக்கியங்களில் அசிரத்தை (விசுவாசமின்மை), (ரு) சாஸ்திரவாக்கியங்களில் அசிரத்தை, (சா)குருவாக்கியத்தில் அசிரத்தை, (எ)நாமத்தில் அர்த்தவாதப்பிர

மம்,(அ)அநேகபாபங்களை நாசஞ்செய்யும்நாமம் என்னிடமிருக்கிறதென்னும் விசுவாசத்தால் நிஷித்தகர்மங்களை யாசரித்தல்,(௯)முற்கூறிய விசுவாசத்தினாலேயே விதித்தகர்மங்களை விடுதல், (௧௦)ஈசுவரநாமத்தை மற்றத் தர்மங்களோடு சமமாகக் காணுதல் என்னும் இப்பத்தும்சிவவிஷ்ணுக்களின்நாமாபராதங்களாம்.''

---

இரண்டாம்பதிப்பின்

## முகவுரை.

---

முன் இல்லாத மங்கலமும், அங்கங்குத் தமிழில் மாத்திரம்எழுதப்பட்டிருந்த சுருதிவாக்கியங்கட்குத் தேவநாகரியில் மூலமும், தத்துவமஸி மகாவாக்கியார்த்தத்தில் ஸ்ரீமத்சங்கராசாரியஸ்வாமிகளுக்கு அபிமதமான சுருதிவாக்கியமும், அதன் தமிழுரையும், அதனோடு ஜிஞ்ஞாசுக்களின் அபேக்ஷையின்படி நான்கு மகாவாக்கியமும், அதன் அர்த்தமும், அதற்குப் பிரமாணசுருதியும் சேர்த்து, சிறிது விஸ்தாரப்படுத்தப்பட்டிருக்கிறது.

# முகவுரை.

இதிலேதேனும் குற்றமிருந்தாலதைப் பெரியோர் பொறுக்க.

வெ. குப்புஸ்வாமி ராஜு,

ஸ்ரீஸத்குருவிஷ்ணுஸ்வாமிநே நம:

---

உ

ஸ்ரீகணேசாய நம:

மூன்றும்பதிப்பின்

# முகவுரை.

இப்பதிப்பில் இரண்டாம்பதிப்பில் ஏற்பட்டிருந்த பிழைகள்யாவும் திருத்தப்பட்டிருக்கிறது.

கு. பாக்கியம்பிள்ளை,

மானேஜிங் டிரஸ்டி,

ஸ்ரீசங்கரவிலாஸ சாரதாமந்திரம், தஞ்சை.



உ

ஸ்ரீ கணேசாய நம:

சாந்தோக்கியத்தில்

ஒன்பதுமுறை சொல்லப்பட்டிருக்கும்

# தத்துவமஸிமகாவாக்கிய உபதேசம்.

## மங்கலம்.

பங்கயன் முதலோர் போற்றும் பரமனே கருணை பொங்கி
யிங்குளோர் குறைகடீர்ப்பா னெழிற் றிருமேனி கொண்டு
சங்கரப் பெயராற் றோன்றிச் சாற்றினன் பாடியாதி
துங்கமா மவன்பதத்திற் றூய்மலர் தொழுது நிற்பாம்.

தத்துவ முணர்த்த வந்த சற்குரு விஷ்ணு நாதன்
சத்திய பதங்கள் சூடிச் சாந்தோக் கியத்தின் மேலாந்
தத்துவ மஸிமா வாக்யத் தனியுப தேசந் தன்னை
யித்தரை யுள்ளார் தேர வியம்புவன் றமிழின் மாதோ.

"தத்துவமஸி" என்பது சாமவேதத்தினது சாந்தோக்கியவுபநிஷத்தின் ஆறுவது பிரபாடக(அத்தியாய)த்திலுள்ள மகாவாக்கியம். அஃது ஒன்பது முறை உபதேசிக்கப்பட்டிருக்கின்றது.

அவற்றுள், முதலில் சுவேதகேதுவாகிய புத்திரனுக்கும் உத்தாலகரென்னும் பிதாவுக்கும் நடந்த சம்

வாதப் பிரசங்கத்தை முன்னிட்டு இக்கதை சுருக்கமாய்ச் சொல்லப்படுகின்றது:—

உத்தாலகரிஷிக்குச் சுவேதகேதுவென்னும் புத்திரனிருந்தான். அவனைத் தகுந்த வித்தைக்குப் பாத்திரனென்று மதித்து, அவனது பூணுநூல் தரிக்குங்காலங் கழிதலைக் கண்டுப் பிதாவானவர் சொல்லுகின்றார்.

உத்தாலகர்வாக்கியம்:-ஓ! சுவேதகேதுவே! நமது குலத்தை யநுசரித்த குருவினிடஞ் சென்று பிரஹ்மசரியம் பூண்டு வித்தையை யப்பியசிக்கும் பொருட்டு வாசஞ்செய். சௌமியனே (காண்டற்கினியவனே)! நமதுகுலத்திலுண்டாகிய புருஷனைவன் வித்தையை யப்பியசிக்காது, தான் மூர்க்கனாய்த் தனது நிர்வாகத்தின்பொருட்டுப் பிராஹ்மணர்களைப் பந்துவென்றெண்ணும் பிரஹ்ம பந்துவைப்போன்றிருத்தல் யுக்தம் (தகுதி) அன்று. எக்காரணத்தால் பிதா தான் குணவானாயிருந்தும் புத்திரனை உபநயனஞ் செய்வித்துப் படிப்பிக்கவில்லையோ, அக்காரணத்தால் புத்திரன்படிக்கும்பொருட்டுப் பிதாவை விட்டு வேறு தேசத்திற்குச் செல்லுதல் அநுமானத்தினு லறியப்படுகின்றது.

இவ்வாறு பிதா சொல்லுங்காலத்தில் சுவேதகேது பன்னிரண்டு வயதுடையவனாயிருந்தான். பூணூற்றரித்து ஆசாரியனிடத்து இருபத்துநான்கு வயதுவரையில் நான்கு வேதங்களையும் படித்துப் பெருமனதுடையவனும், தன்னை வித்துவானென்று மதிக்கும் வணக்கமின்றிய சுபாவமுடையவனுமாய் வீட்டிற்கு வந்தான். அப்புத்திரனை முற்கூறிய தன்மையுள்ளவனைக் கண்டு உத்தாலகரென்னும் பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்வாக்கியம்:-சுவேதகேதுவே! சௌமியனே! நீ இப்பெருமனதுடையவனும், தன்னை வித்துவானென்று மதிக்கும் வணக்கமின்றிய சுபாவமுடையவனுமா யிருத்தற்கு உனக்கு ஆசாரியனிடத்தினின்றும் கிடைத்த அதிசயம் யாது?

எந்த ஆதேச(பிரஹ்மவுபதேச)த்தால் கேட்கப்படாத மற்றது (காரியரூபஜகத்து) கேட்கப்பட்டதாகுமோ, மனனஞ் செய்யப்படாத மற்றது மனனஞ் செய்யப்பட்டதாகுமோ, நிச்சயிக்கப்படாத மற்றது நிச்சயிக்கப்பட்டதாகுமோ, அவ்வாதேசத்தையும் ஆசாரியனிடத்துக் கேட்டிருக்கின்றாயா? என்று பிதா

சொன்னார். அப்போது சுவேதகேது, பகவானே! அவ் வாதேசம் எத்தன்மைத்தென்று கேட்கப் பிதாவான வர் " यथासोम्येकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्याद्वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् ॥ சௌமியனே! ஒருமிருத்திகையி(மண்ணி)ன்பிண்டத்தால்(திரளால்) குடமுதலிய காரியங்கள் யாவும் மிருத்திகைமயமாக நிச்சயிக்கப்பட்டனவாகின்றன. வாக்கின் ஆசிரயமான விகாரம் (காரியம்) நாமமாத்திரமாம். மிருத்திகையே சத்தியமாம்." என்பதுமுதல் மண், பொன், இரும்பு என்னும் மூன்று திருஷ்டாந்தங்களைச் சொல்லி, " एवं सोम्य स आदेशो भवति- சௌமியனே! அவ்வாதேசம் இங்ஙனமாகின்றது." என்பதுவரையிற் சொன்னார். அப்போது புத்திரன் சொல்லுகின்றான்.

சுவேதகேதுவாக்கியம்:—பூஜிதராகிய எனது குரு நிச்சயமாகத் தாம்கூறிய இவ்வுபதேசத்தையறியார். அறிந்திருப்பாராயின், குணமுடைமை, பக்தி, அநுகதம்(பின்பற்றல்)என்னு மிவைமுதலிய குணங்களோடு கூடிய எனக்கெப்படிச் சொல்லாதிருப்பர்? ஆதலால் தாமே இதைச் சொல்லுவீராகவெனப் பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்வாக்கியம்:—சௌமியனே! அப்படியே ஆகட்டும் (அதைச் சொல்லுகிறேன்). "सदेव सोम्येदमग्र आसीत्- சௌமியனே! முன் இது ஒரே அத்விதீய சத்தாகவே இருந்தது." என்றாரம்பித்து, சத்ரூப பிரஹ்மத்தினின்று ஈக்ஷண (ஞான) பூர்வமாக அக்கினி, ஜலம், அந்நம் (பிருதிவி) என்னும் மூன்று பூதங்கள் பௌதிகங்கள் (பூதகாரியங்கள்) என்பவற்றின் உற்பத்தியைச் சொல்லிப்பின்னர் ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தை யறிவிக்கும் "तत्त्वमसि- தத்துவமஸி (அது நீயாயிருக்கிறாய்)". என்னும் மகாவாக்கியத்தை ஒன்பது முறையுபதேசஞ்செய்தார். அவ்வொன்பது உபதேசத்தையும் காட்டுவாம். அருணி என்பவரின் புத்திரனாகிய ஆருணி என்னும் உத்தாலகர் சுவேதகேது வென்னும் புத்திரனுக்குச் சுழுத்தியைக் கூறுகின்றார்.

## முதலுபதேசம்.

திரிவிருத்காரணத்தை (பிருதிவி ஜலம் தேயுவெனும் மூன்று பூதங்களுக்கு மொன்றற்கொன்றுண்டா

கும் கலப்பை) விஷயஞ்செய்யும் அவாந்தரப்பிரகரண
த்தை முடித்து, சத்தை (பிரஹ்மத்தை) விஷயஞ்செய்
யும் மகாப்பிரகரணத்தைச்சொல்லுகின்றவராய்ச்சுழு
த்தியில் மனது இலயமாகவே ஜீவனுக்குச் சத்தின்
அடைவுண்டாகின்ற தென்பதைச் சொல்லுவதற்கு
முற்கூறியமனவுபாதி யுடைமையை யநுவாதஞ் செய்
கின்றார்.

உத்தாலகர்:—சௌமியனே! என்னிடம் தெரிந்
துகொள். புருடன் தூங்குங்காலத்து "இப்புருடன்
தூங்குகிறான்" என்னும் பெயர் அவனுக்குண்டாகி
றது. அப்போது சௌமியனே! சத்தோடு (பிரஹ்ம
த்தோடு) ஏகரூப மாகின்றான். பரமார்த்த சத்துரூப
மான தன்னை யடைகிறான். எதனால் தான் தன்னை ய
டைகிறானோ, அதனால் இந்தப் புருடனைத் தூங்குகி
றான் என்று சொல்லுகிறார்கள். அதாவது சிதாநந்தா
தி குணங்களின் அப்பிரசித்தியினாலும் சுவாத்மப்பி
ராப்தி யுண்டாகின்ற தென்பது கருத்து [க].

ஜாக்கிரசொப்பனங்களி லுண்டாகிய சிரமத்தை
நிவர்த்திக்கும் பொருட்டுப் பிரஹ்மமாகிய நீட (இரு
ப்பிட-ஆசிரய)த்தை அடைதல் சுழுத்தியவஸ்தையி
ல் அறியப்படுகின்ற தென்பதைக் கூறுகின்றார்:—எப்

படிச் சகுனி (இராஜாளி என்னும் பறவை) கயிற்றி
ளுற் கட்டப்பட்டதாய்த் திசைகடோறும் பறந்து,
வேறிடங்களை யாசிரயமாயடையாது பந்தன(கட்டப்
பட்டிருக்குமிட)த்தையே ஆசிரயிக்கின்றதோ, அப்ப
டியே நிச்சயமாக சௌமியனே! அம்மனம்(மனவுபா
தியையுடைய ஜீவன்) ஜாக்கிரசொப்பனங்களில் சுக
துக்கங்களென்னும் திசைகடோறும் பறந்து(அநுபவ
ரூபமான கமனத்தைச் செய்து) வேறிடமாகிய ஆசிர
யத்தை யடையாது, பிராணரூப பந்தனத்தை ஆசிர
யிக்கிறது. சௌமியனே! எதனால் மனம்(மனவுபாதி
யயுடை ஜீவன்)பிராணனை(பிராணனால் உபலக்ஷிக்கப்
பட்ட பரப்பிரஹ்மத்தை)ப் பந்தன(ஆசிரய)மாகவு
டைத்தாயிருக்கிறதோ, அதனால் அது பிராணனையே
ஆசிரயிக்கின்றது [உ].

இவ்வாறு "தூங்குகிறான்" என்னும்பெயரின்பிர
சித்திவாயிலாகச் சீவனது சத்தியசொரூபமான ஜகத்
தின் மூலத்தைப் புத்திரனுக்குக்காட்டி, இப்போது
அந்நமுதலிய காரியகாரணங்களின் பரம்பரையானும்
ஜகத்தின் மூலமாகிய சத்தைக் காட்டுகின்றார்:-சௌமி
யனே! பசியையும் தாகத்தையும் என்னிடத்திலிருந்

தும் தெரிந்துகொள். எக்காலத்திற் புருஷன் போஜனஞ்செய்ய இச்சிக்கின்றானோ, அக்காலத்தில் "இப் புருடன் போஜனஞ்செய்ய இச்சிக்கின்றான்"னென்னும் பெயர் இவனுக்குண்டாகின்றது. அப்போது உண்ட அக்கடின அந்நத்தைப் பருகப்பட்ட ஜலமானது கொண்டு செல்லுகின்றது அதாவது கடின அந்நத்தை மிருதுவாக்கி இரச முதலிய பிரபாவமாகப் பரிணமிக்கச் செய்கின்றது. அது எப்படிக் கோக்களைப் பாலனஞ்செய்யும் கோபாலன் "கோநாய"னெனப்படுகின்றானோ, குதிரையைப் பாலனஞ்செய்யும் அசுவபாலன் "அசுவநாய" னெனப்படுகின்றானோ, புருஷர்களைப் பாலிக்கும் இராஜா அல்லது சேனாபதி "புருஷநாய" னெனப்படுகின்றானோ, அதுபோல உண்ட அந்நத்தைப் பக்குவஞ்செய்யுஞ் சமயத்தில் ஜலமும் உண்ட அந்நத்தைப் பாலனஞ் செய்வதாயிருத்தலால் "அசனாய (அசனபால)" னென்று சொல்லப்படுகின்றது. (அசனம்-உணவு, நாயன்-நடத்துவோன்.) இப்படி எப்போது உண்ட அந்நத்தைப் பாகஞ்செய்ததோ, அப்போது அங்கே மாம்ஸ முதலியவற்றின் வாயிலாக இந் தச் சரீரமாகிய காரியமுண்டாயிற்று, சௌமியனே!

அக்காரியத்தை அறி. இச்சரீரமாகிய காரியம் மூல மில்லாத(காரணமின்றிய)தாகாது [௩].

இச்சரீரமாகிய காரியத்திற்கு அந்நத்தைவிட வேறிடமான மூலமெங்கிருக்கும்? அந்நமே மூலமா மென்பது பொருள்.

சௌமியனே! இவ்வாறே அந்நமாகிய காரியத் தால் ஜலமாகிய மூலத்தை யறி. சௌமியனே! ஜலமா கிய காரியத்தால் தேயுரூப மூல(காரண)த்தை யறி. சௌமியனே! தேயுரூப காரியத்தால் சத்து(பிரஹ்ம) ரூப மூலத்தை யறி. சௌமியனே! சத்து எவற்றிற்கு மூல(காரண)மா யிருக்கிறதோ, அப்படிப்பட்டவை இத்தாவரசங்கமமாகியசகல ஜகத்துமாம். சத்து எவற் றிற்குத் திதிக்காலத்தில் ஆசிரயமா யிருக்கின்றதோ, சத்து எவற்றிற்குப் பிரதிஷ்டையா(முடிவில் இலய மா)யிருக்கின்றதோ, அப்படிப் பட்டவை பிரஜைக ளாம் [௪].

எக்காலத்தில் புருடன் பானஞ்செய்ய இச்சிக்கி ன்றானோ; அக்காலத்தில் "இவன் பானஞ்செய்ய இச் சிக்கின்றான்" என்னும் பெயர் அவனுக்குண்டாகின் றது. அப்போது சரீரத்திலுள்ள அக்கினியம்சமாகிய

தேயுவே பானஞ்செய்யப்பட்ட அந்தஜலத்தைக்கொண்டுபோகின்றது அதாவது பருகிய ஜலத்தை இரக்த முதலிய தன்மையாகப் பரிணமமடையச் செய்கின்றது. கோபாலர், அசுவபாலர், புருஷபாலர்களைப்போலவே அத்தேயு ஜலத்தைக்கொண்டுபோவதாயிருத்தலால் அதை "உதன்னியம்(உதகபாலன்)" என்று உலகத்திற் சொல்லுகிறார்கள். அங்கே ஜலத்திற்கும் இச்சரீரவடிவ காரியமே யுண்டாயிற்று. சௌமியனே! இச்சரீரரூபகாரியம் அக்காரணமாகா தென்றறி [ரு].

அச்சரீரத்திற்கு ஜலத்தைவிட வேறிடம் எங்கே காரணமாகும்? ஜலமே காரணமென்பது பொருள்.

சௌமியனே! ஜலரூபகாரியத்தால் தேயுரூபகாரணத்தை யறி. சௌமியனே! இத்தாவரசங்கமமாகிய சகலப்பிரஜைகளும் சத்ரூப மூலமுடையனவும், சத்ரூப ஆசிரயமுடையனவும், சத்ரூப பிரதிஷ்டையு(அந்தமு)டையனவுமாம். பிரசித்தமான இந்தத்தேயு ஜலம் அந்நமென்னும் மூன்று தேவதைகளும் அதிஷ்டானமாகிய புருஷனை(பிரஹ்மத்தை)யடைந்து ஒவ்வொன்றும் மும்மூன்றுவித மாகின்றது. அஃது இம்

முதலுபதேசத்திற்கு முன்னரே சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறு தேயு ஜலம் அந்நமென்பவற்றின் காரியசொரூபமான சரீரமென்னும் காரியவாயிலாகச் சத்தாகிய தத்துவத்தின் நிரூபணம் செய்யப்பட்டது.

இப்போது மரணவாயிலாலும் அந்தச் சத்தின் நிரூபணஞ்செய்ய ஆரம்பிக்கின்றார்:—சௌமியனே! இறக்கின்ற இப்புருடனது வாக்கு மனதிலும், மனம் பிராணனிலும், பிராணன் தேயுவிலும், தேயு பரதேவதையி(பிரஹ்மத்தி)லும் இலயமாகின்றன. அந்த யாதொரு(சத்துரூபமான)இது (முற்கூறியவிதத்தது) அணிமாவாம் அதாவது ஜகத்திற்குக் காரணரூபமான அதிசூக்குமமாம் [௬].

அந்த இச்சத்துரூப ஆத்மாவை (சொரூபத்தை) யுடையது இவ்வெல்லாமு(ஜகத்து)மாம். அது (சத்ரூபகாரணம்)சத்தியமாம்(பரமார்த்த சத்தாம்). அதுவே ஆத்மாவாம். ஆதலால் சுவேதகேதுவே! தத்துவமஸி (அதுநீ யாகிறாய்).

சுவேதகேதுவாக்கியம்:—பகவானே! "தினந்தோறும் சகலப் பிரஜைகளும் சுழுத்தியிற் சத்தை யடைகின்

றார்கள்.'' என்று தாம் சொன்னீர்கள்; அஃது எனக்குச் சந்தேகமா யிருக்கின்றது. ஏனெனின் எதனால் சத்தை யடைந்து ''நாம் சத்தை யடைந்திருக்கிறோம்'' என்றறியவில்லையோ, அந்த ஏதுவினால் எனக்குச் சந்தேக முண்டாகின்றது. ஆதலால் பகவானாகிய தாம் மறுபடியும் எனக்குத் திருஷ்டாந்தத்தால் அறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்வாக்கியம்:-சௌமியனே! அப்படியே ஆகட்டுமென்று பிதா சொல்லுகிறார் [எ].

முதலுபதேசம் முடிந்தது.

---

## இரண்டாமுபதேசம்.

---

உத்தாலகர்:-சௌமியனே! தேனீயானது தேனை யுண்டாக்குகிறது. நாநாகதியுடைய விருக்ஷங்களின் இரசங்களைச் சேர்த்து இரசத்தில் மதுத்தன்மையாகிய ஐக்கியத்தைச் சம்பாதிக்கின்றது [க]. அந்த இரசமானது அந்தமதுவில் ''இன்ன பலா முதலிய விருக்ஷத்தினிரசம் யான்'' என்னும் விவேக(பேதஞான)த்தை யடைகிறதில்லை. அதுபோலவே சௌமியனே! நிச்

சயமாக இவ்வெல்லாப் பிரஜைகளும் சுழுத்தி மரணம் பிரளய மென்னும் காலங்களில் சத்தில் ஐக்கியத்தை யடைந்தும் "யாம் சத்தை யடைந்திருக்கிறோ" மென் றறிகிறதில்லை [உ]. அந்த ஆத்மா இவ்வுலகத்தில் புலி, அல்லது சிங்கம், அல்லது ஓநாய், அல்லது பன்றி, அல்லது கீடம், அல்லது பதங்கம், அல்லது ஈ, அல்லது கொசு, அல்லது எதெது உண்டாகின்றதோ, அதது (முற்கூறிய புலி சிங்கமுதலியன) அப்போது உத்தான (எழுங்) காலத்திலேயே இருக்கின்றது [௩]. அந்த யாதொரு இது அணிமாவாம் (சூக்ஷ்மத்தன்மையாம்). இது ஆத்மாவையுடைய இவ்வெல்லா ஜகத்துமாம். அது சத்தியமாம். அஃது ஆத்மாவாம். ஆதலால் சுவேதகேதுவே "தத்துவமஸி (அது நீ)".

சுவேதகேதுவாக்கியம்:-உலகத்தில் தனது வீட்டில் தூங்கிய புருஷன் எழுந்து அந்நியகிராமத்திற்குப் போவானாயின், அவன் "யான் எனது வீட்டினின்று வந்திருக்கிறேன்" என்று அறிகிறான். அதுபோல் சுழுத்திமுதலியவற்றினின் றெழுந்த ஜந்துக்களுக்கு "யான் சத்தினின்று வந்திருக்கிறேன்" என்னும்

விசேஷ அறிவு ஏன் உண்டாகிறதில்லை? ஆதலால் மறு படியும் பகவானாகிய தாம் எனக்கறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்வாக்கியம்:-சௌமியனே! அப்படியே ஆகட்டுமென்று பிதா சொல்லுகிறார்.

இரண்டாமுபதேசம் முடிந்தது.

---

## மூன்றாமுபதேசம்.

---

உத்தாலகர்:-சௌமியனே! கீழ்த்திசையைநோக்கிச்செல்லுவனவாகிய கங்கைமுதலிய நதிகள் கீழ்த்திசையை நோக்கிச் செல்லுகின்றன. மேற்றிசையை நோக்கிச் செல்லுவனவாகிய சிந்து முதலிய நதிகள் மேற்றிசையை நோக்கிச்செல்லுகின்றன. அந்நதிகள் முதலிற் சமுத்திரத்தினின்றும் மழைவடிவமாகி விழுகின்றன. பின் சமுத்திரத்தையே யடைந்து சமுத்திர வடிவமே யாகின்றன. அந்நதிகள் சமுத்திரத்தில் "இக்கங்கையான்" "இவ்யமுனையான்" என்றறிகிறதில்லை [க]. சௌமியனே! இப்படியே நிச்சயமாக இவ்வெல்லாப் பிரஜைகளும் சுழுத்தி முதலியவற்றி

னின்று மெழுங்காலத்தில் சத்தினின்று வந்தும் "யாம் சத்தினின்று வந்தோ" மென்றறிகிறதில்லை. இவ்வுலகத்தில் புலி, அல்லது சிங்கம், விருகம், (ஓநாய், நரி), அல்லது பன்றி, அல்லது கீடம், அல்லது பதங்கம் (பறவை), அல்லது ஈ, அல்லது கொசு என்னு மெவை, சுழுத்திமுதலியவற்றிற் சத்தை யடைந்திருக்கின்றனவோ, அப்புலி சிங்கமுதலியன அப்போது எழுங்காலத்தில் சத்தினின்றே வந்திருக்கின்றன [உ]. அந்த யாதொரு இது அணிமாவாம் (அதிசூக்ஷ்மமாம்). இவ்வடிவமுடையன இவ்வெல்லாமுமாம். அது சத்தியமாம். அஃது ஆத்மாவாம். ஆதலால் சுவேதகேதுவே! தத்துவமஸி (அது [சத்து] நீ).

சுவேதகேது:—உலகத்தில், ஜலத்தில் அலை நுரை குமிழிமுதலியன வெழும்புகின்றன. பின்னர் ஜலரூபத்தை யடைந்து நாசமாகின்றன வென்பதைக் கண்டிருக்கிறேன். ஜீவர்களோ சுழுத்தி மரணம் பிரளயம் என்பவற்றில் பிரதிதினமும் (எப்போதும்)அச்சத்துரூப காரணத்தன்மையை யடைகின்றன. ஆயினும் நாசமாகிறதில்லை. ஆதலால் பகவானாகிய தாம் எனக்கிதை மறுபடியு மறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்:-அப்படியே ஆகட்டுமென்று பிதா சொல்லுகின்றார்.

மூன்றுமுபதேசம் முடிந்தது.

## நான்காமுபதேசம்.

உத்தாலகர்:-சௌமியனே! இவ்வெதிர்ப்பக்கத்திலுள்ள பெரிய மரத்தினடியில் ஓர் புருடன் பரசு (கோடரி) முதலிய ஆயுதங்களால் வெட்டுவானாயின், அப்போது அம்மரம் உலர்ந்துபோகிறதில்லை; ஆனால் ஜீவித்தேயிருக்கின்றது ஆயுதவெட்டால் அதனிரசம் ஒழுகுகிறது. மத்தியில் வெட்டினால் அப்போதும் அது ஜீவித்திருக்க இரசம் ஒழுகுகிறது. நுனியில் வெட்டினால் அப்போது அது ஜீவித்திருக்க இரசம் ஒழுகுகிறது.

அந்த இம்மரம் ஜீவாத்மாவினால் வியாபிக்கப்பட்டதாய் மிகுந்த ஜலத்தையிழுப்பதும் பூமியினிரசங்களை வேர்களால் கிரகிப்பதுமா யிருக்கின்றது. அன்றியும் ஆநந்தத்தை யடைந்ததாய் நிலைத்திருக்கின்றது [க]. எப்போது இவ்விருக்ஷத்தின் ஒரு சாகை

(கிளை)யை ஜீவன் விடுகிறதோ, அதாவது சாகையினி
ன்றும் உபாதியின் சங்கோச(குவிதல்)வாயிலாகத்தன்
னைச்சுருக்குகின்றதோ, அப்போது அச்சாகை பட்டுப்
போகிறது. எப்போது இரண்டாவது சாகையைச் சீ
வன் விடுகிறதோ, அப்போது அச்சாகை காய்கின்றது.
எப்போது மூன்றாவது சாகையைச் சீவன்விடுகிறதோ,
அப்போது அச்சாகை காய்கின்றது. எப்போது விரு
க்ஷமுழுவதையும் ஜீவன் விடுகிறதோ, அப்போது வி
ருக்ஷமுழுவதும் பட்டுப்போகின்றது. சௌமியனே!
இப்படியே நிச்சயமாக அறியென்று பிதா சொன்னார்
[உ]. எப்படிச் சீவனோடுகூடிய விருக்ஷம் ஜீவிக்கின்ற
தோ, ஜீவனின்றிய விருக்ஷம் இறக்கின்றதோ, ஜீவன்
இறக்கிறதில்லையோ, அதுபோல ஜீவனினின்றும் வி
யோகத்தை யடைந்த பிரசித்தமாகிய இச்சரீரம் நிச்ச
யமாக மரிக்கின்றது. ஜீவன் மரிக்கிறதில்லை. அந்த யா
தொரு இது அணிமாவாம். இவ்வடிவுடையது இவ்வெ
ல்லாமுமாம். அது சத்தியமாம். அஃது ஆத்மாவாம்.
ஆகையால் சுவேதகேதுவே! "தத்துவமஸி(அது நீயா
கிறாய்)."

சுவேதகேது:—இந்தப் பிருதிவிமுதலிய நாமரூபமுடைய ஜகத்து எதுவோ, அஃது அத்தியந்தசூக்ஷும சத்துரூபமும் நாமரூபமின்றியதுமாகிய சத்தினின்றும் எப்படி உண்டாகிறது? இதைத் திருஷ்டாந்தத்தால் பகவானாகிய தாம் மறுபடியும் எனக்கு அறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்:—சௌமியனே! அப்படியே ஆகட்டுமென்று பிதாவானவர் சொல்லுகின்றார். [௩].

நான்காமுபதேசம் முடிந்தது.

---

## ஐந்தாமுபதேசம்.

---

உத்தாலகர்:—எதிரில் நிற்கும் இந்தப் பெரிய ஆலவிருக்ஷத்தினின்றும் இவ்விருக்ஷத்தினது பழத்தைக் கொண்டுவா.

சுவேதகேது:—பகவானே! இதோ பழத்தைக் கொண்டுவந்தேன்.

உத்தாலகர்:—இப்பழத்தைப் பேதி(பிள).

சுவேதகேது:—பகவானே! பிளந்தேன்.

உத்தாலகர்:—பிளந்த இப்பழத்தில் என்ன காண்கிறாய்?

சுவேதகேது:-பகவானே! அதிசூக்ஷ்மம்போன்ற இப்பழங்களில் விதைகளைக் காண்கிறேன்.

உத்தாலகர்:-பிரியனே! இவ்விதைகளினின்றும் ஒரு விதையைப் பிள.

சுவேதகேது:-பகவானே! ஒருவிதையைப் பிளந்தேன்.

உத்தாலகர்:-பேதித்த இவ்விதையில் என்ன காண்கிறாய்?

சுவேதகேது:-பகவானே! ஒன்றும் காணப்படவில்லை [க].

உத்தாலகர்:-சௌமியனே! எந்த இவ்வதிசூக்குமபீஜத்தைப் பிரசித்தமாகக் காணவில்லையோ, அப்படிப்பட்ட இந்தச் சூக்குமவித்தின் பிரசித்தகாரியரூபமான இந்தப்பெரிய ஆலவிருக்ஷம் நிலைத்திருக்கின்றது[உ]. சௌமியனே! சிரத்தைசெய். இதுபோலஅந்த(சத்துரூபமான)யாதொரு இது அத்தியந்தசூக்ஷ்மமாம்.இவ்வடிவம்(சத்ரூபம்)இவ்வெல்லாமு(ஜகத்து)மாம். அது சத்தியமாம். அஃது ஆத்மாவாம். ஆதலால் சுவேதகேதுவே! தத்துவமஸி(அது நீ யாகிறாய்).

சுவேதகேது:-அந்தச் சத்து ஜகத்திற்குக் காரணமாகுமாயின், அது ஏன் காணப்படவில்லை? இதை மறுபடியும் பகவானாகிய தாம் திருஷ்டாந்தத்தால் அறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்:-சௌமியனே! அப்படியே ஆகட்டுமென்று பிதா சொல்லுகிறார். [௬].

ஐந்தாமுபதேசம் முடிந்தது.

## ஆறாமுபதேசம்.

உத்தாலகர்:-இந்த உப்பைக் குடத்திலுள்ள ஜலத்திற் போட்டுவிட்டு என்னிடம் காலையில் வரவேண்டுமென, அப்போது அச்சுவேதகேது அப்படியே செய்தான். அப்புத்திரனைப் பார்த்து மறுநாட் காலையிற் பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்:-பிரியனே! எந்த உப்பை இராத்திரி நீரிற் போட்டாயோ, அதைக் கொண்டுவாவெனப் புத்திரன் அவ்வுப்பை ஜலத்திற் பார்த்துப் புலப்படவில்லையென அப்போது பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்:-பிரியனே! அவ்வுப்புக் கரைந்துவிட்டபோதிலும் [க]. இந்நீரை மேலாகக் குடியெனப் புத்

திரன் மேலாகக் குடித்தான். அப்போது பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்:-குழந்தாய்! இந்நீர் சுவை(உருசி)யால் எப்படி யிருக்கின்றது?

சுவேதகேது:-பகவானே! இந்நீர் சுவையால் உப்பா யிருக்கிறது.

உத்தாலகர்:- இந்நீரை மத்தியாகச் சுவைத்துப் பாரெனப் புத்திரன் மத்தியினின்றும் நீரைக் குடித்தான். அப்போது அவனைப் பார்த்துப் பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்:-இந்நீர் சுவையால் எப்படி யிருக்கின்றது?

சுவேதகேது:-இந்நீர் சுவையால் உப்பாயிருக்கின்றது.

உத்தாலகர்:-குழந்தாய்! இந்நீரைக் கீழாக ஆசமனஞ் செய்யெனப் புத்திரன் கீழிருந்தும் ஆசமனஞ் செய்தான். அப்போது பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்:-இந்நீர் சுவையால் எப்படி யிருக்கின்றது?

சுவேதகேது:-இந்நீர் சுவையால் உப்பா யிருக்கின்றது.

உத்தாலகர்:-இந்நீரைக் குடித்துவிட்டு என்னிடம் வாவெனப் புத்திரன் உப்பை விட்டுப் பிதாவினருகே வந்தான்.

சுவேதகேது:-பகவானே! அவ்வுப்பு எப்போதும் செவ்வையாயிருக்கின்றதென்று புத்திரன் சொல்ல, அப்போது அவனைப் பார்த்துப் பிதா சொல்லுகின்றார்.

உத்தாலகர்:-சௌமியனே! இவ்வாறு இவ்வுப்பு முதலில் தரிசனபரிசனங்களாற் கிரகிக்கப்பட்டிருந்தது. பின்னர் ஜலத்திற் கரைந்தகாலத்துத் தரிசனபரிசனங்களால் கிரகிக்கப்படவில்லை. என்றாலும் உள்ளதாகவே இருக்கிறது; அந்நியவுபாயுத்தாற்(நாவாற்)றோற்றுதலால். இப்படியே இந்தத்தேயு ஜலம் அந்நமுதலியவற்றின் காரியமாகிய தேகத்தில் ஆசாரியனது உபதேசத்தால் பிரசித்தமான சத்திருக்கின்றது. தேயு ஜலம் அந்நமுதலிய காரியங்களுக்குக் காரணமெதுவோ, அது ஆலின் சூக்ஷ்மவிதையைப்போல் உள்ளதாகவே

யிருந்தும் இந்திரியங்களினுல் அறியப்படுகிறதில்லை. நாவினுல் உப்பை யறிவதுபோல உள்ளதான ஜகத்திற் குக் காரணமான அச்சத்தையை அந்நிய உபாயத்தா லறிவாய்[உ]. அந்த யாதொரு இஃது அத்தியந்தசூக் குமமாம். இவ்வடிவம் இவ்வெல்லாமுமாம். அது சத் தியமாம். அஃது ஆத்மாவாம். ஆதலால் சுவேதகே துவே! தத்துவமஸி(அது நீ யாகிருய்).

சுவேதகேது:-இவ்வாறு ஜகத்திற்குக் காரண மாகிய அச்சத்து, உப்பைப்போல இந்திரியங்களால் தோற்றப்படாததாயிருந்தாலும் வேறு உபாயத்தால் அறியக்கூடியதா யிருக்கின்றது. எதனை யறிதலால் யான் கிருதார்த்தனுவேனே, எதனை யறியாததினுல் யான் கிருதார்த்தனுகேனே, அந்தச் சத்தையறிதலில் உபாயம் யாது? பகவானுகிய தாம் மறுபடியும் என க்கு அறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்:-சௌமியனே! அப்படியே ஆகட்டு மென்று பிதா சொல்லுகிருர். [௩].

ஆறுமுபதேசம் முடிந்தது.

## ஏழாமுபதேசம்.

உத்தாலகர்:-சௌமியனே! திரவியத்தை யபகரிக்குந் திருடர்கள் ஓர் புருடனைக் கண்களைக் கட்டிக் காந்தார மென்னும் தேசத்தினின்றும் கொண்டுவந்து, அவனை அங்கிருந்தும் மிக நிர்ஜனமான தேசத்தில் விட்டு விட்டார்கள். பிறகு அப்புருடன் அங்கே திக்குப்பிரம முடையவனானன். கிழக்கு அல்லது வடக்கு அல்லது மேற்குத் திசையை நோக்கினன் அவன் "கட்டப்பட்ட கண்ணுடைய யான் இங்கே வந்திருக்கிறேன். கட்டப்பட்ட கண்ணுடையவனாகவே விடப்பட்டிருக்கிறே" னென்று கத்தினன் [க]. அவனை ஓரிரக்கமுள்ள புருடன் கட்டவிழ்த்துவிட்டு "வடதிசையில் காந்தார தேச மிருக்கிறது. ஆதலால் அத்திசையை நோக்கிச் செல்லுக" என்று சொன்னன். அப்போது பண்டிதனும், மேதாவியும் (மற்றவனால் உபதேசிக்கப்பட்ட கிராமத்திற்குப் பிரவேசிக்கும் மார்க்கத்தை நிச்சயித்தலிற் சமர்த்தனும்), காந்தாரதேசவாசியுமான அப்புருடன் ஓர் ஊரினின்றும் மற்றோர் ஊரைக் கேட்டுக் கொண்டே காந்தாரதேசத்தை யடைந்தான். அது

போலவே இங்கே(தார்ஷ்டாந்தத்தில்)ஜீவனென்னும் புருடன் ஜகத்வடிவமான சத்தின் சொரூபத்தினின் றும் தேயு ஜலம் அந்நமுதலிய வடிவினதும்; வாதம், பித்தம், கபம், இரத்தம், மேதை(கொழுப்பு), மாமிசம், எலும்பு, மஜ்ஜை(மூளை), சுக்கிலம், கிருமி, மூத்திரம், மலமென்பவற்றோடு கூடியதும்; சீதம், உஷ்ணமுதலிய அநேக துவந்துவரூப துக்கமுடையதுமான இச்சரீர மாகிய வனத்தில், மோக மென்னும் பட(வஸ்திர)த் தால் கண்கள் கட்டப்பட்டவனுய்ப்பாரியை, புத்தி ரன், பசு, பந்துமுதலிய திருஷ்டாதிருஷ்டமான விஷ யங்களில் ஆசை யென்னும் பாசத்தாற் பிணிக்கப்பட் டவனுய்ப் புண்ணிய பாவ முதலிய கர்மமென்னுந் திரு டர்களால் பிரவேசத்தையடைந்தான். "யான் இன்னு னுடைய புத்திரன்; இவன் எனது உறவினன்; யான் சுகி, துக்கி, மூடன், பண்டிதன், தருமவான், பந்தமு டையவன், பிறந்திருக்கிறேன், இறந்தேன், குறைந் தேன், பாவியாயிருக்கிறேன்; என் புத்திரனிறந்தான்; என் திரவியம் நஷ்டமாயிற்று; ஐயோ! கெட்டேன்; நான் எப்படி ஜீவிப்பேன்? எனக்கு என்ன கதி(விய வஸ்தை)யாகும்? என்னை இரக்ஷிப்பவன் யாவன்?

என்று அநேகமாயிரம் அநர்த்தக் கூட்டங்களுடையவனைப்போல அலறுகிறான். அகஸ்மாத்தாய்ப் புண்ணிய மிகுதிப்பாட்டால் பரமதயாளுவும் சத்ரூப பிரஹ்மமென்னும் ஆத்மாவை யறிபவருமாகிய பந்தநீங்கிய ஓர் பிரஹ்மநிஷ்டபுருஷனை யடைந்தான்.

அந்தப் பிரஹ்மவித்தானவர் கருணையினால் இவனுக்குச் சம்சாரத்திலுள்ள விஷயங்களில் தோஷத்தைக் காணும் மார்க்கத்தைக் காட்ட அதனாலேயே சம்சாரவிஷயங்களினின்றும் விரக்தியடைந்த அவனுக்கு ஆசாரியன் "நீ சம்சாரியும், இன்னானுடைய புத்திரனெனல்முதலிய தர்மமுடையவனுமல்லன்; ஆனால் சத்தெதுவோ, அது நீ(தத்துவமஸி) என்று சொன்னார். அப்போது அவித்தையினாலாகிய மோக மென்னும் படத்தின் பந்தனத்தினின்றும் விடுபட்டுக் காந்தார தேசத்தின் புருஷனைப்போலத் தனது சத்ரூப ஆத்மாவை யடைந்து சுகியானான். இவ்வர்த்தத்தையே கூறுகின்றார்:—

ஆசாரியனையுடைய புருஷன் அறிகிறான். அந்த ஞானிக்கு எக்காலம்வரையில் தேகபாதம்(தேகத்தின்

வீழ்ச்சி)உண்டாகவில்லேயோ, அவ்வளவு காலம்வரை யிலுமே நீட்சியாம்(சத்தாகிய ஆத்ம சொரூபத்தி னடைவின் அவகாசமாம்). அப்போதுதான்(தேகம் விழுங்காலத்திற்றான்) சத்தை யடைகிறுன் [உ]. அந்த யாதொரு இஃது அணிமாவாம். இவ்வடிவம் இவ்வெல்லாமுமாம். அது சத்தியமாம். அஃது ஆத்மாவாம். ஆதலால் சுவேதகேதுவே! தத்துவமஸி(அது நீ யாகிறுய்).

சுவேதகேது:-அங்ஙனமாயின், இந்தத் தேகபாத (உடல்விழும்)சமயத்தில் சத்தின் பிராப்திவடிவமோ சம்சாரியின் மரணக்கிரமமாம்; வித்துவானது சத்தை யடையும் கிரம மன்று. அந்த மரணமடைகிறவர்களது சத்தின் பிராப்தி, வித்துவானது சத்தின் பிராப்தி யென்னு மிவ்விரண்டற்கும் பேதம் சொல்லத்தக்கதாம். ஆதலால் ஆசாரியனேயுடைய புருஷனைப்போல அந்த மரணமுடைய புருஷன் எந்தக் கிரமத்தால் சத்தை யடைகிறுனே, அந்தக் கிரமத்தைத் திருஷ்டாந்தத்தால் மறுபடியும் எனக்குப் பகவானுகிய தாம் அறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்:-சௌமியனே! அப்படியே ஆகட்டுமென்று பிதா சொல்லுகிறுர். [ங].

ஏழாமுபதேசம் முடிந்தது.

## எட்டாமுபதேசம்.

உத்தாலகர்:-ஸௌம்யனே! சுரமுதலிய ரோகத்தை யடைந்த புருஷனை உறவினர் சுற்றிக்கொண்டு என்னைத் தெரிகிறதா? என்னைத் தெரிகிறதா? என்று கேட்கிறார்கள். அப்போது அந்த மரிக்கும் புருடனுடைய வாக்கு மனத்திலும், மனம் பிராணனிலும், பிராணன் தேஜசிலும், தேஜசு பரதேவதையி(சத்தி)லுமாக எதுவரையில் ஒடுங்கவில்லையோ, அவ்வளவு காலம்வரையினும் அப்புருடன் அறிகிறான் [க].

எப்போது மரிக்கும் புருடனது வாக்கு மனதிலும், மனது பிராணனிலும், பிராணன் தேஜசிலும், தேஜசு பரதேவதையிலும் ஒடுங்குகிறதோ, அப்போது அறிகிறதில்லை [௨]. அந்த யாதொரு இஃது அதிசூக்ஷ்மமாம். இந்த (பிரஹ்ம)வடிவம் இவ்வெல்லாமுமாம். அது சத்தியமாம். அஃது ஆத்மாவாம். ஆதலால் சுவேதகேதுவே! தத்துவமஸி (அது நீ யாகிறாய்).

சுவேதகேது:-எப்போது மரிக்கிறவனுக்கும் மோக்ஷமடைகிறவனுக்கும் சத்தை யடைதல் சமமாகின்

றதோ, அப்போது அவ்விருவரிலும் வித்துவான் சத்தை யடைந்து ஜன்மமுதலியனவாகிய ஆவிருத்தியை யடைகிறதில்லை; அஞ்ஞானி ஆவிருத்தி(மறுமை)யை யடைகிறான். இதிற் காரணம் யாது? அதைத் திருஷ்டாந்தத்தால் மறுபடியும் பகவானாகிய தாமெனக்கறிவிக்கவேண்டும்.

உத்தாலகர்:-சௌமியனே! அப்படியே ஆகட்டுமென்று பிதா சொல்லுகிறார். [ரு].

எட்டாமுபதேசம் முடிந்தது.

---

## ஒன்பதாமுபதேசம்.

---

உத்தாலகர்:-சௌமியனே! திருட்டுச் செய்கையிற் சந்தேகமுள்ள (சந்தேகப்படத்தக்க) புருடனைக் கைகளைத் தளைந்து இராஜதூதர்கள் கொண்டு வந்தார்கள். அப்போது சிலர் (இவனை ஏன் கொண்டு போகிறீர்கள் என்று)கேட்க இராஜதூதர்கள், இவன் திரவியத்தை யபகரித்தான்(திருடினான்) என்று சொன்னார்கள். (அதற்கவர்கள் கூறியது). இவனைப் பரீக்ஷிக்கும் பொருட்டுப் பரசை(இருப்புக்குடாரத்தை)ப் பழுக்கக்

காய்ச்சுங்கள். அப்புருடன் அத்திருட்டைச் செய்தி ருப்பானாயின், அதனாலேயே அவன் தன்னைப்பொய்ய னாக்கிக் கொள்ளுகிறான். அந்தப் பொய்ப்பிரதிஞ்ஞை யுடையவன் பொய்யினால் தன்னை மறைத்து மழுவை யேந்துகிறான். (அதனால்)அவன் தாகத்தை யடைகிறா ன் அதாவது நெருப்பு அவனைச் சுடுகிறது. பின் இராஜ தூதர்களால் கொலையுண்கிறான். [க]

அப்புருடன் திருட்டைச்செய்யாதவனாயின் அத (மழுவை யேந்துதலி)னாலேயே தன்னை மெய்யனாக்குகி றான், அந்தச் சத்தியப்பிரதிஞ்ஞை யுடையவன் சத்தி யத்தினால் தன்னை மறைத்துக் காய்ச்சிய பரசை யேந்து கிறான். (அதனால்)தாகத்தை யடைகிறதில்லை. பொய் யாகிய திருட்டை யாரோபித்த புருடர்களினின்றும் விடுபடுகிறான் [உ]. அந்தச் சத்தியப் பிரதிஞ்ஞையு டைய புருடன் எப்படி அங்கே தகிக்கப்படுகிறதில்லை யோ, அப்படியே சத்தாகிய பிரஹ்மத்தின் சத்தியப் பிரதிஞ்ஞையுடையவனும் பொய்ப்பிரதிஞ்ஞை யுடை யவனுமாகிய இருவருக்கும் சரீரம் விழுங்காலத்துச் சத்தையடைதல் சமமாயினும், வித்துவான் சத்தைய டைந்து மறுபடியும் புலி தேவன் முதலிய தேகத்தைக்

கொள்ளுதற்பொருட்டு ஜன்மமுதலிய ஆவிருத்தியை யடைகிறதில்லை. அஞ்ஞானியோ எவ்வாறு கர்மஞ்செய்திருக்கிறானோ, அக்கர்மங்களின் பலன் சாஸ்திரங்களில் எவ்வாறு கேட்கப்பட்டிருக்கின்றதோ, அவ்வாறு மறுபடியும் புலிமுதலிய தன்மையையேனும் தேவர்முதலியதன்மையையேனும் அடைகிறான். ஆதலால், எதனது சொரூபத்தின் பிரதிஞ்ஞை அப்பிரதிஞ்ஞைகளைச் செய்தலால் மோக்ஷமும் பந்தமுமாகின்றனவோ, எது ஜகத்திற்கு மூலமோ, சர்வப்பிரஜைகளும் எதன் ஆசிரயமாயும் எதனிடத்தில் அந்தமுடையனவாயுமிருக்கின்றனவோ, எது இவ்வமிர்தமும் அபயமும் சிவமும் அத்வி தீயமுமாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட இந்த(சத்தாகிய பிரஹ்ம)வடிவம் இவ்வெல்லாமு(ஜகத்து)மாம். அது(சத்து)சத்தியமாம்(பரமார்த்த சத்தாம்). அது(சத்து)உன் ஆத்மாவாம் (சொரூபமாம்). ஆதலால்சுவேதகேதுவே! 'தத்துவமஸி'(அதுநீயாகிறாய்).

இவ்வாறு பிதாவினாற் சொல்லப்பட்ட சத்தாகிய பிரஹ்மத்தைச் சுவேதகேதுவாகிய புத்திரன் 'அது நான்' என்று அறிந்தான். அறிந்தான்.

ஒன்பதாமுபதேசம் முடிந்தது.

இங்கே ஸ்ரீபாஷியகாரரதுவசனமிதுவாம்:-

வினா:-ஆறுவது அத்தியாயத்திற் கூறிய தத்துவமஸி மகாவாக்கியமாகிய பிரமாணத்தினால் இவ்வாத்மாவிற் சனித்ததும் பலித்ததுமாகப் பின்னர்ச் சித்தித்தது யாது?

விடை:-எந்த ஆத்மா, கேட்கப்படாததைக் கேட்கும்பொருட்டும், நினைக்கப்படாததை நினைக்கும்பொருட்டும், அறியப்படாத்தை யறிதலாகிய பலத்தின் பொருட்டும் அதிகாரத்தை யடைந்திருக்கிறதோ, எந்த ஆத்மாவாகிய அர்த்தத்தை நாம் 'துவம்' பதவாச்சியமென்று சொல்லுகிறோமோ, அந்த ஆத்மாவாகிய அர்த்தத்திற்குச் சுவ(தனது)சொரூபத்தில் கிரியையின் கர்த்திருத்துவத்திலும் அதனது பலத்தின் போக்திருத்துவத்திலு முள்ள மித்தையான அதிகாரித்தன்மையின் விஞ்ஞான மெதுவோ அவ்விஞ்ஞானத்தின் நிவிருத்தியே அந்த மகாவாக்கியமாகிய பிரமாணத்தின் பலமாம்.

முற்கூறியவண்ணமான பிரமாணத்தின் பலத்தையே வர்ணிக்கின்றார்:-இந்த மகாவாக்கியத்தாலுண்டா

கிய பிரஹ்மாத்மஐக்கியவிஞ்ஞானத்திற்கு முன் "யானே அக்கினிஹோத்திராதி கர்மங்களைச் செய்வேன்; யானே இக்கர்மங்களின் அதிகாரி; இக்கர்மங்களின் பலனை இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் அநுபவிப்பேன் அல்லது செய்யப்பட்ட கர்மங்களிற் கிருதகிருத்தியனுவேன்; இவ்வாறு கர்த்திருத்வபோக்திருத்துவங்களில் யானதிகாரி" யென்றிவ்வாறு ஆத்மாவினிடத்து அவ்வஞ்ஞானிக்கு விஞ்ஞான முண்டாயிற்று.

அது(விபரீதஞானம்), ஒரே அத்துவிதீய ஜகத்திற்குக்காரணமான(விவர்த்த)உபாதானமான சத்துஎதுவோ, "அது நீ(தத்துவமஸி)" என்னும் மகாவாக்கியத்தினுல் பிரபோத(ஞான)த்தையடைந்த புருடன் எவனே, அவனுக்கு நிவர்த்தியாகின்றது. ஏனெனின், ஆத்மாவின் கர்த்திருத்வமுதலியவற்றின் ஞானம் பிரஹ்மவடிவாந்தன்மையின் ஞானமென்னும் இவ்விரண்டற்கும் ஒன்றற்கொன்று விரோதமாம். ஆகலின் பிரஹ்மஞானத்தால் கர்த்திருத்துவமுதலியவற்றின் ஞானம் நிவர்த்தியாதல் கூடும்.

முற்கூறிய விரோதத்தை விளக்குகின்றார்;—எதனுல் ஒரே அத்துவிதீய ஆத்மாவை 'இவ்வாத்மா நான்'

என்றறிந்து, 'எனக்கு இச்சாதனங்களால் இக்கர்மஞ் செய்யத்தக்கதாம்; இக்கர்மத்தைச் செய்து இதன் பலத்தை அநுபவிப்பேன்.' என்னும் பேதஞானம் சம்பவிக்கிறதில்லையோ, அதனால் அத்துவிதீய ஆத்மாவின் ஞானமுண்டாகவே, விகாரமும் அநிர்தமு(பொய்யு)மாகிய ஜீவாத்மாவின் விஞ்ஞானம் நிவர்த்தியாகின்றதென்பது யுக்த(பொருத்த)மாம்.

இவ்வாறு 'தத்துவமஸி' என்னும் வாக்கியம் முக்கியமாய் ஐக்கியபரமாமென்னும் *தமது பக்ஷத்தைக்

---

*இங்குச் சுருதியின் அபிப்பிராயத்தினை ஸ்ரீமத்சங்கர பகவற்பாதர்கள் தமது அபிப்பிராயமாகக் கொண்டிருத்தல் பற்றியே இங்குத் தமது பக்ஷத்தைக் கூறி என்று கூறப்பட்டது. அவ்வபிப்பிராயமுள்ள சுருதி வருமாறு:—

"सत्यं ज्ञानमनंतमानंदं सर्वशरीरोपाधिविनिर्मुक्तं कटकमकुटाद्युपाधिरहितसुवर्णघनवद्विज्ञानघनचिन्मात्रस्वभावमात्मचैतन्यं ब्रह्म यदवभासते तदविद्योपाधिकं त्वंपदार्थस्स प्रत्यगात्मा ॥ सत्यं ज्ञानमनंतमानंदं सर्वज्ञत्वाद्युपेतं मायोपाधिकं तत्पदार्थः परमात्मा । सर्वोपाधिविमुक्तं निर्विशेषचिन्मात्रं स-

கூறி, இப்போது பரபக்ஷத்தைச் சங்கித்து நிராகரிக்கின்றார்:—

---

दद्वैतमानंदममायं ब्रह्म । तद्धि त्वंपदार्थादौपाधिकात्तत्पदार्थाच्चौपाधिकभेदाद्विलक्षणमभेदमाधिष्ठानत्वोपलक्षितं शुद्धं पारमार्थिकम् सत्तामात्रमविनाशि ॥ சத்தியமும், ஞானமும், அநந்தமும், ஆநந்தமும், சர்வ உபாதிகளினின்றுவிடுபட்டதும், கடகம் மகுடமுதலிய உபாதிகளின்றிய சுவர்ணகனம்போல விஞ்ஞானகன சின்மாத்திரஸ்வபாவமும், ஆத்மைசதன்னியமுமான எந்தப்பிரஹ்மம் விளங்குகின்றதோ, அஃது அவித்தையினை யுபாதியாகவுடைய துவம்பதார்த்தமாம். அது பிரத்தியகாத்மாவாம்.

சத்தியமும், ஞானமும், அநந்தமும், ஆநந்தமும், சர்வஞ்ஞத்துவாதியோடுகூடியதும், மாயோபாதியுடையதுமான தத்பதார்த்தம் பரமாத்மா.

சர்வோபாதிகளினின்று விடுபட்டதும், நிர்விசேஷசின்மாத்திரமும், சத்தும், அத்வைதமும், ஆநந்தமும், மாயையின்றியதுமாயுள்ளது பிரஹ்மம்.

அதுவே உபாதியினையுடைய துவம்பதார்த்தத்தினும் தத்பதார்த்தத்தினும் உபாதியினாலாகிய பேதத்தினும்

அற்றேல் 'தத்துவமஸி' யென்னும் வாக்கியத்தில் 'துவம்(நீ)' என்னும் சத்தத்தின் வாச்சியார்த்தத்தில், சத்தாகிய பிரஹ்மத்தின் புத்தியுபதேசிக்கப்படுகின்றது. எப்படி ஆதித்தன், மனமுதலியவற்றில் பிரஹ்மமுதலியவற்றின் புத்தி யிருக்கின்றதோ, எப்படி உலகத்தில் பிரதிமைமுதலியவற்றில் விஷ்ணுமுதலியோர்களின் புத்தி யிருக்கின்றதோ, அதுபோல இம் மகாவாக்கியத்தில் 'துவம்' பதத்தின் வாச்சியமாகிய ஜீவனிடத்துப் பிரஹ்மத்தின் புத்தி உபதேசிக்கப்படுகின்றதென்றிவ்வாறு பூர்வபக்ஷி தனது மதத்தைச் சொல்லி,வேறு சங்கையினால் சித்தாந்தத்தைத் தூஷிக்கின்றான்.

அப்படியானால்,'சத்தே நீ' என்பதனால் எப்போது சத்தே சுவேதகேது வாகின்றானோ, அப்போது ஆத்

---

விலக்ஷணமும்,அபேதமும்,அதிஷ்டானத்தன்மையினாலுபலக்ஷிக்கப்படுவதும், சுத்தமும், பாரமார்த்திகமும், சத்தாமாத்திரமும், அவிநாசியுமாம்.'' என்பது சர்வசாரோபநிஷதம். மற்றும் அநேக சுருதிகளுளவாயினும் அவை விரிவஞ்சியெழுதப்படவில்லை. அவற்றை அறிய விரும்புவோர் ஸ்ரீ விசாரசந்திரோதயம், ௧௧-வதுகலையின் விளக்கவுரையிற் காண்க.

மாவை(தன்னை)எப்படி யறிவான்? அறியாமையாகிய காரணத்தால் அந்தச் சுவேதகேதுவிற்குத் 'தத்துவமஸி' என்று பிதாவினால் உபதேசஞ் செய்யப்படுகின்றது. சுவேதகேது சன்மாத்திரவடிவமாவனாயின், அச் சன்மாத்திரவடிவத்தின் அஞ்ஞானம் சம்பவியாது. அதனால் அடிக்கடி உபதேசித்தல் சித்தியாதென்பது பொருள்.

இப்பூர்வபக்ஷியின் வார்த்தை சம்பவியாது; ஏனெனின், 'தத்துவமஸி' யென்னும் வாக்கியம் "ஆதித்தியன் பிரஹ்மம்" என்னு மிவைமுதலிய வாக்கியங்களினும் விலக்ஷணமா யிருத்தலால். 'ஆதித்தியன்(சூரியன்) பிரஹ்மம்' என்னு மிவை முதலிய வாக்கியங்களில், என்று (इति) என்னும் சொல்லின் அந்தராயத்தால்(மறைப்பால்) ஆதித்தியன்முதலியவற்றிற்குச் சாக்ஷாத்பிரஹ்மத்தன்மை யறியப்படுகிறதில்லை. ஆனால் ஆதித்தியன்முதலியனவும், ஆகாயமும், மனமும், உருவமுதலிய குணமுடையனவா யிருத்தலாலும், என்றென்னும்சொல்லின் அந்தராயத்தாலும் அவற்றிற்கு அப்பிரஹ்மத்தன்மை(பிரஹ்மமாகாமை)யே யுண்டு.

இந்த (ஆருமத்தியாயமாகிய) பிரகரணத்திலோ சத்தி ற்கே தேகத்தின்கண் ஜீவரூபமாகப் பிரவேசித்தலைக் காட்டித் 'தத்துவமஸி' யென்று நிரங்குச (தடையற்ற) சத்தாகிய ஆத்மத்தன்மையைப் பிதா உபதேசிக்கின் ருர். ஆதலால் அது அவற்றினும் விலக்ஷணமாம்.

அப்படியாளுல் 'பராக்கிரமமுதலிய குணமுடை ய சிங்கம் நீ' யென்னும் வாக்கியம்போல 'தத்துவமஸி' யென்னும் வாக்கியம் கௌணமான ஐக்கியத்தை யறி விப்பதா மென்று கூறுவாமெனின், அது பொருந்தா து; ஏனெனின் குடமுதலிய காரியங்களுக் கபின்ன மான (வேருகாத) மண்முதலிய காரணங்களைப்போல "ஒரே அத்துவிதீய சத்து எதுவோ அது நீ" என்னும் உபதேசம் காணப்படுதலால். அன்றியும் "அந்த ஞானி க்கு அவ்வளவு காலம்வரையிலுமே அவகாசமிருக்கின் றது." என்று சத்தின் அடைவாகிய விதேகமோக்ஷம் உபசார (ஆரோபித ஐக்கிய) த்தின் விஞ்ஞானத்தால் உபதேசிக்கப்படவில்லை; ஏனெனின், "நீ இந்திரன், இயமன்" என்பதுபோன்ற உபசாரத்தின் விஞ்ஞானம் மித்தையாதலால். அன்றியும் 'அந்தச்சத்து நீ' யென்

பது சுவேதகேதுவின் துதியு மன்று; சுவேதகேதுவு
க்கு உபாசிக்கப்படுந்தன்மை யில்லாமையால். சத்துப்
பொருளும்சுவேதகேதுத் தன்மையின் உபதேசத்தால்
துதிக்கு விஷயமாக்கப் படுகின்ற தென்பது மில்லை;
ஏனெனின், 'தாசன் நீ' என்று இராஜன் துதிக்கு விஷ
யமாகாமையால். சர்வாத்மாவாகிய சத்தெதுவோ அத
ற்குச் சுவேதகேதுத்தன்மையின் உபதேசத்தால் ஓரி
டத்தின் நிரோதமும்(பரிச்சின்னத் தன்மையும்) பொ
ருந்தாது. "தத்துவமஸி (அது நீ)" என்று சத்தின்
ஆத்மரூபத்தன்மையை யுபதேசித்தலால், இங்கே சத்
திற்குத் தேசாதிபதி கிராமாதிபதியாதல் போல அந்
நிய அர்த்தமாகிய அந்நியமதி சம்பவியாது.

அப்படியானால், "நான் சத்து" என்னும் புத்தி
மாத்திரம், இம்மகாவாக்கியத்தில் கர்த்தவ்வியத்தன்
மையாக விதிக்கப்பட்டிருக்கின்றது; "அறியப்படாத
சத்து நான்" என்று போதிக்கப்படவில்லை யென்றிவ்
வாறு பூர்வபக்ஷி சொல்லுவானாயின் அது பொருந்
தாது. ஏனெனின், அந்தப் பக்ஷத்திலும் "கேட்கப்ப
டாதது கேட்கப்பட்டதாம்" என்னுமிவை முதலிய
வார்த்தைகள் அசம்பவமாம்.

"சத்து நான்" என்னும் புத்தியின் விதி ஸ்துதியின்பொருட்டா யிருத்தலால் முற்கூறிய அசம்பவமில்லை யென்று கூறின், அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், " आचार्यवान्पुरुषो वेद-ஆசாரியனையுடைய புருஷன் அறிகிறான்." " तस्य तावदेव चिरं-அவனுக்கு அதுபரியந்தமே அவகாசமாம்." என்னுமுபதேசத்தால். எப்போது "சத்து நான்" என்னும் புத்திமாத்திரம் கர்த்தவ்வியத்தன்மையாக விதிக்கப்படுகிறதோ, "துவம்" சப்தத்தின் வாச்சியத்திற்குச் சத்துரூபத்தன்மையே யுண்டாகவில்லையோ, அப்போது ஆசாரியனையுடைய புருஷன் அறிகிறான்." என்னும் ஞானோபாயத்தின் உபதேசம் சொல்லத்தக்கதாகாது. எப்படி "அக்கினிஹோத்திரத்தை யஜிக்கவேண்டும்" என்னுமிவை முதலிய வாக்கியங்களில் ஆசாரியனையுடைமை அர்த்தத்தால் அடையப்பட்டதாகவே யிருக்கினும், உபதேசம்செய்யப்படவில்லையோ, அதுபோலவன்று. இங்கே ஆசாரியனையுடைமையுபதேசம் செய்யப்பட்டேயிருக்கிறது. ஆதலால் "அக்கினிஹோத்திரத்தை யஜிக்கவேண்டும்." என்னும் விதிவாக்கியத்தினும்

"தத்துவமஸி" என்னும் வாக்கியத்திற்கு வேறுபாடி ருக்கின்றது. இங்கே சொல்லப்படும் ஏது எதுவோ, அதனாலும் இம்மகாவாக்கியம் "நான் சத்து" என்னும் புத்தியைச்செய்தலின் விதியா மென்று மதிக்கத்தக்க தாகா தென்பதைக் கூறுகின்றார்:—இம்மகாவாக்கியத் தால் "நான் சத்து" என்னும் புத்திமாத்திரம் விதிக் கப்படுமாயின், அப்போது "அவனுக்கு அதுவரையி லுமே அவகாசமாம்." என்று மோக்ஷத்தின்விலம்பத் தைச் சொல்லுதல் அயுக்தமாகும்; ஏனெனின், சத்து ரூபமான ஆத்மதத்துவம் அஞ்ஞாதமாயினும்(அறிய ப்படாததா யிருக்கினும்), ஒருமுறை பரோக்ஷமாக "நான் சத்து" என்னும் புத்திமாத்திரத்தைச்செய்த லில்மோக்ஷமா மென்னும் பிரசங்கத்தால். அன்றியும் "தத்துவமஸி" யென்று அதிகாரியைநோக்கிச் சொல் லுதலால் "நான் சத்து" என்று மகாவாக்கியப்பிரமா ணத்தாலுண்டாகிய புத்தி நிவர்த்திக்கக்கூடியதன்று. அல்லது மகாவாக்கியத்தின் சிரவணத்தால் "சத்தா கிய பிரஹ்மம்நான்" என்னும் புத்தியுண்டாகவில்லை யென்று சொல்லக்கூடியதன்று; ஏனெனின், "அதிகா ரிக்குப் பிரமாஞானத்தை யுண்டுபண்ணுவது வேத

மாம்.'' என்னும் நியாயமிருத்தலால். அன்றியும் சகல உபநிடதவாக்கியங்களும் தற்பர(பிரஹ்மாத்ம ஐக்கிய பர)மாதலினாலேயே கிருதார்த்தமாதலால், "தத்துவமஸி'' என்னும் வாக்கியம் வஸ்துபரமேயாம். ஆதலால் எப்படி அக்கினிஹோத்திரமுதலியவற்றின் விதியினாலுண்டாகிய அக்கினிஹோத்திரமுதலியவற்றினது கர்த்தவ்வியத்தன்மையின் புத்திக்கு அவ்வர்த்தத்தின் அபாவமாவது உற்பத்தியின்மையாவது சொல்லக்கூடியதன்றோ, அதுபோலத் "தத்துவமஸி'' யென்னும் பிரமாணத்தாலுண்டாகிய "சத்தியப்பிரஹ்மம் நான்'' என்னும் புத்தி நிவர்த்தியாகவாவது, உண்டாகவில்லை யென்று சொல்லவாவது கூடியதன்று. சத்துரூப ஆத்மா சத்துரூபமாகிய தன்னை யெப்படி அறியுமென்று முற்கூறிய இத்தோடமு மில்லை. ஏனெனின், "காரிய காரணமாகிய தேகாதிசங்காத(கூட்ட)ங்களுக்கு வேறான ஜீவனாகிய நான் கர்த்தா போக்தாவா யிருக்கிறேன்'' என்று சுபாவமாகச் சார்வாகர்களுக்கு வேறாகிய வாதிகளான பிராணிகளுக்கும் விஞ்ஞானத்தின் தரிசன மில்லை. ஆதலால் இச்சுவேதகேதுவுக்குச் சத்துரூபமான ஆத்மாவின் விஞ்ஞானமில்லை யென்பதில்

பேதம் யாதிருக்கின்றது? இவ்வாறு சங்காதத்திற்கு வேருகிய ஆத்மாவின் விஞ்ஞானமுண்டாயிருக்க; அத்தேகத்திற்குவேருகிய ஆத்மவாதிகளுக்கு ஆத்மாவினிடத்துக் கர்த்திருத்துவமுதலியவற்றின் விஞ்ஞானமெப்படிச் சம்பவிக்கும்? ஆனல் சங்காத அபிமானம் நீங்கினுற் சம்பவியாது.(அதுவோ அவர்களிடத்தில்) காணப்படுகிறது. அதுபோல அந்தச் சுவேதகேதுவுக்கும் அஞ்ஞானதோஷத்தினுல்தேகாதிகளில் ஆத்மபுத்தி யிருத்தலால் சத்துரூப ஆத்மாவின் விஞ்ஞானமில்லே. ஆதலால்விகாரமாகிய அங்ருதத்தில்(பொய்யில்) அதிகாரியாகிய ஜீவாத்மத்தன்மையின் விஞ்ஞானத்தை நிவர்த்திப்பதே இத்தத்துவமஸிமகாவாக்கிய மென்பது சித்தித்தது.

## அத்வைதபூர்வாசாரியர்களது அபிப்பிராயம்.

ஒரே வேதாந்தசித்தாந்தத்தில் உத்தம மத்திம கநிஷ்ட அதிகாரிகளுக்கு அறிவிக்கும்பொருட்டு, அஜாதவாதம், திருஷ்டிசிருஷ்டிவாதம், சிருஷ்டிதிருஷ்டிவாத(வியாவகாரிகபக்ஷ)மென மூன்று பக்ஷங்களிருக்கின்றன. ௧. எதில் ஒரே பரமார்த்தசத்தை அங்கீகரிக்-

கப்படுகிறதோ, அது அஜாதவாதமாம். உ. எதில் பாரமார்த்தசத்தை பிராதிபாசிகசத்தை யென்னு மிரண்டும் அங்கீகரிக்கப்படுகின்றனவோ, அது திருஷ்டிசிருஷ்டிவாதமாம். ங. எதில் பாரமார்த்திகம்பிராதிபாஸிகம் வியாவகாரிகமெனமூன்று சத்தைகள் அங்கீகரிக்கப்படுகின்றனவோ, அது சிருஷ்டி திருஷ்டிவாதமாம். அவற்றுள், அஜாதவாதத்தில் ஆரோபாபவாதங்களின்மையால் வாச்சியார்த்தலக்ஷியார்த்தங்களின் கற்பனை பொருந்தாது. திருஷ்டிசிருஷ்டிவாதத்தில் சொப்பனகற்பிதராஜாவைப்போல ஜீவனாற் கற்பிக்கப்பட்ட ஈசுவரன் 'தத்' பதத்திற்கும், அவித்தையினாலாவரிக்கப்பட்ட பிரஹ்மமாகிய ஜீவன் 'துவம்' பதத்திற்கும் வாச்சியார்த்தங்களாம். இரண்டு பதங்களுக்கும் சுத்தப்பிரஹ்மம் லக்ஷியார்த்தமாம்.

வியாவகாரிகபக்ஷத்தில், க. பிம்பப்பிரதிபிம்பவாதம், உ. காரியகாரணவாதம், ங. அவச்சின்ன அநவச்சின்னவாதம், ச. அவச்சேதவாதம், ரு. ஆபாசவாதமென ஐந்து பக்ஷங்க ளடங்கியிருக்கின்றன. அவற்றுள்,

க. பிம்பப்பிரதிபிம்பவாதத்தின்படி அஞ்ஞான உபகிதசுத்தப்பிரஹ்மமாகிய பிம்பஈசுவரன் 'தத்' பத வாச்சியார்த்தமும், சமஷ்டி யஞ்ஞான சம்பந்தத்தால் பிராந்தியினால் பிரதிபிம்பத்தன்மையை யடைந்த பிரஹ்மமாகிய ஒரே ஜீவன் 'துவம்' பத வாச்சியார்த்தமுமாம். பிம்பப்பிரதிபிம்பத்தன்மையின் கற்பனை யின்றிய அசங்கசுத்தசைதன்னியம் இரண்டு பதங்களுக்கும் லக்ஷியார்த்தமாம்.

உ. காரியகாரணவாதத்தின்படி காரண(மாயா) வுபாதியுடையசேதன ஈசுவரன் 'தத்' பதவாச்சியமும், காரிய(அந்தக்கரண)உபாதியுடையசேதனஜீவன் 'துவம்' பதவாச்சியமுமாம். இரண்டு உபாதிகளுமின்றிய சுத்தப்பிரஹ்மம் இரண்டற்கும் லக்ஷியமாம்.

௩. அவச்சின்ன அநவச்சின்னவாதத்தின்படி அந்தக்கரண அநவச்சின்னசேதனஈசுவரன் 'தத்' பதவாச்சியமும், அந்தக்கரண அவச்சின்னசேதனஜீவன் 'துவம்' பத வாச்சியமுமாம். அவச்சின்னம் அநவச்சின்ன மென்னும் உபாதியின்றிய சுத்தப்பிரஹ்மம் இரண்டற்கும் இலக்ஷியார்த்தமாம்.

௪. அவச்சேதவாதத்தின்படி மாயாவச்சின்ன (மாயாவிசிஷ்ட) சேதன ஈசுவரன் 'தத்' பதவாச்சியார்த்தமும், மாயாநவச்சின்னபிரஹ்மசேதனம் 'தத்' பதத்தின் லக்ஷியார்த்தமுமாம். அந்தக்கரண அல்லது வியஷ்டியஞ்ஞான அவச்சின்ன (விசிஷ்ட) சேதனமாகிய ஜீவன் 'துவம்' பதவாச்சியார்த்தமும், அந்தக்கரண அல்லது வியஷ்டியஞ்ஞான அநவச்சின்னகூடஸ்தசேதனம் 'துவம்' பதலக்ஷியார்த்தமுமாம்.

௫. ஆபாசவாதத்தின்படி ஆபாசனோடுகூடிய மாயாவிசிஷ்டசேதன ஈசுவரன் 'தத்' பதத்தின் வாச்சியார்த்தமும், ஆபாசனோடுகூடிய மாயாபாகத்தைவிட்டு எஞ்சிநின்ற சுத்தப்பிரஹ்மம் லக்ஷியார்த்தமுமாம். ஆபாசனோடுகூடிய அந்தக்கரணம் அல்லது வியஷ்டியஞ்ஞானம்சவிசிஷ்ட சேதனமாகிய ஜீவன் 'துவம்' பதத்திற்கு வாச்சியார்த்தமும், ஆபாசனோடுகூடிய அந்தக்கரணம் அல்லது வியஷ்டியஞ்ஞானம்சமென்னும் விசேஷணபாகத்தை நீக்கி எஞ்சிநின்ற கூடஸ்தசேதனம் லக்ஷியார்த்தமுமாம். அவ்விரண்டு லக்ஷியார்த்தங்களுக்கும் அகண்டைகரசத்துவமுண்டு.

முற்கூறிய சகலப்பிரக்கிரியைகளுக்கும் ஜீவத்துவ ஈசுவரத்துவங்களையும் ஜகத்தையும் ஆரோபித்து, அவற்றின் அபவாதவாயிலாக அத்வைதப் பிரஹ்மத்தை யறிவித்தலில் தாற்பரியமாம்.

**தத்துவமஸி மகாவாக்கிய உபதேசம்**

**முடிந்தது.**

ஸ்ரீசிவாயபரமகுரவே நம:



ஓ௦தத்ஸத்பிரஹ்மணே நம:

யஜுர்வேதத்தின்

சுகரஹஸ்யோபநிஷத்திலுள்ள

# நான்குமஹாவாக்கியார்த்தம்.

நான்குமஹாவாக்கியங்களாவன:—

க. பிரஞ்ஞானம் பிரஹ்மம். உ. அகம் பிரஹ்மாஸ்மி. ௩. தத்துவமஸி. ௪. அயமாத்மா பிரஹ்மம் என்பனவாம்.

க. முதலாவது ருக்வேதத்தின் ஐதரேயவுபநிஷத்திலுள்ள *"பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தைக் கூறும் சுருதி வருமாறு:—

येनेक्षते शृणोतीदं जिघ्रति व्याकरोति च ।
स्वाद्वस्वादू विजानाती तत्प्रज्ञानमुदीरितम् ॥ १ ॥

(இதன் பொருள்) புருஷன் நேத்திரவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணவிருத்தியுபகிதஎந்தச் சைதன்னியத்தினால் காணத்தக்க இவ்வுருவமுதலியவற்றைக் காண்கின்றானோ, அப்படியே சுரோத்திரவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணவிருத்தியுபகித எந்

*பிரஞ்ஞானம்=மிக்கறிவு. பிரஹ்மம்=பேரறிவு.

தச் சைதன்னியத்தினால் சத்தங்களைக் கேட்கின்றானோ, அப்படியே கிராணத்தி(மூக்கி)னின்று வெளிப்பட்ட அந்தக்கரணவுபகித எந்தச் சைதன்னியத்தினால் கந்தக்கூட்டங்களை முகருகின்றானோ, வாக்கிந்திரியத்தினால் அவச்சின்ன(வேறு பிரித்தறிவிக்கப்பட்ட) எந்தச் சைதன்னியத்தினால் வார்த்தைகளைப் பேசுகின்றானோ, இரஸனே(ஜிஹ்வே)ந்திரியவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணவிருத்திவடிவ உபாதியுடைய எந்தச் சைதன்னியத்தினால் ருசி அருசிகளாகிய இரசங்களை யறிகின்றானோ, அதுவே இங்கும் "பிரஞ்ஞானம்" என்று சொல்லப்படுகின்றது என்பது பொருள்.

மூலத்திலுள்ள च ச(உம்)என்னும் சொல் சொல்லப்படாத மற்ற இந்திரியங்களையும் கொள்ளுதற்பொருட்டாம். இதில் பிரஞ்ஞானசப்தார்த்தம் நிரூபிக்கப்பட்டது. (க)

चतुर्मुखेंद्रदेवेषु मनुष्याश्वगवादिषु ।
चैतन्यमेकं ब्रह्मातः प्रज्ञानं ब्रह्म मय्यपि ॥ २ ॥

(இ-ள்) சதுர்முகன் இந்திரன்முதலிய உத்தமமான தேவர்களிடத்தும், மத்தியமமான மனிதர்களிடத்

தும், அதமமான குதிரைகோமுதலியவற்றிலும் ஆகாசாதிபூதங்களிலும், ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணமான எந்த ஏகமாகியசைதன்னியமிருக்கின்றதோ, அது "பிரஹ்ம"மாம். ஆதலால் அதாவது எதனால் எல்லோரிடத்துமுள்ள பிரஞ்ஞானம் பிரஹ்மமோ அதனால் என்னிடத்திலுமுள்ளபிரஞ்ஞானம்பிரஹ்மமாம் என்பது பொருள்.

இதில் பிரஹ்மசப்தார்த்தத்தோடு ஐக்கியவடிவ வாக்கியார்த்தமும் நிரூபிக்கப்பட்டது. (௨)

௨. இரண்டாவது யஜுர்வேதத்தின் பிருகதாரணியகவுபநிஷதத்திலுள்ள *"அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறும் சுருதி வருமாறு:—

परिपूर्णः परात्माऽस्मिन्देहे विद्याऽधिकारिणि ।
बुद्धेः साक्षितया स्थित्वा स्फुरन्नहमितीर्यते ॥ ३ ॥

(இ-ள்) பரிபூர்ணமான அதாவது இயல்பாகவே தேசகாலவஸ்துக்களால் சேதிக்கப்படாத பராத்மா

---

* அகம் = யான். பிரஹ்மம் = பேரறிவு. அஸ்மி = இருக்கிறேன்.

மாயாகற்பிதமான இந்த ஜகத்தில் சமமுதலிய சாதனங்களோடுகூடியதன்மையால் வித்தையைச் சம்பாதித்தற்குறிய இந்தச் சிரவணுதி யநுஷ்டானமுடைய மனுஷ்யாதிசரீரத்தில் புத்திக்கு அதாவது புத்தியுபலக்ஷித சூக்ஷ்மசரீரத்திற்குச் சாக்ஷியாந்தன்மையால் அதாவது அதிகாரித்தன்மையாக விளக்குந்தன்மையால் நிலைத்து விளங்குவதாய் அஹம் என்று சொல்லப்படுகின்றது.

இதில் அகமென்னும் பதத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது. (௩)

स्वतः पूर्णः परात्माऽत्र ब्रह्मशब्देन वर्णितः ।
अस्मीत्यैक्यपरामर्शस्तेन ब्रह्म भवाम्यहम् ॥ ४ ॥

(இ-ள்) இயல்பாகவே பரிபூரண மென்று முன் சொல்லப்பட்ட பரமாத்மா இம்மகாவாக்கியத்தால் பிரஹ்மம் என்னும் பதத்தாற் சொல்லப்படுகின்றது. அஸ்மி(இருக்கிறேன்)என்பது ஐக்கியத்தை நினைப்பூட்டுவதாம். அதனல் யான் பிரஹ்மமாகின்றேன்.

இதில் பிரஹ்மபதத்தின் அர்த்தமும் அஸ்மி என்

னும்பதத்தின் அர்த்தத்தால் ஐக்கியவடிவ வாக்கியார்த்தமும் சொல்லப்பட்டன. (௪)

ரு. மூன்றாவது சாமவேதத்தின் சாந்தோக்கியவுபநிஷத்திலுள்ள *"தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறும் சுருதி வருமாறு:-

एकमेवाद्वितीयं सन्नामरूपविवर्जितम् ।
सृष्टेः पुराधुनाप्यस्य तादृक्त्वं तदितीर्यते ॥ ५ ॥

(இ-ள்) सदेव सौम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् என்னும் சாந்தோக்கியவாக்கியத்தால் சிருஷ்டிக்கு முன் ஒரே அத்விதீய(சுவகதாதிபேதசூநிய) நாமரூபங்களின்றிய சத்தானது இருந்தது என்று சொல்லப்பட்டிருக்கின்றது. சிருஷ்டிக்குப் பிந்திய இக்காலத்தும் இச்சத்வஸ்துவின் விசாரதிருஷ்டியினுலுள்ள அப்படிப்பட்டதன்மை "தத்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது அதாவது இலக்ஷணாவிருத்தியினுல் அறியப்படுகின்றது என்பது பொருள். இதில் தத்பதார்த்தம்சொல்லப்பட்டது. (ரு)

---

*தத் = அது. துவம் = நீ. அஸி = இருக்கிறாய்.

श्रोतुर्देहेंद्रियातीतं वस्त्वत्र त्वंपदेरितम् ।
एकता ग्राह्यतेऽसीति तदैक्यमनुभूयताम् ॥ ६ ॥

(இ-ள்) சுரோதாவின் அதாவது சிரவணாதியநுஷ்டானத்தால் மகாவாக்கியார்த்தத்தினை நிச்சயிக்கும் கேட்போனது தேகேந்திரியோபலக்ஷித ஸ்தூலாதி மூன்று சரீரங்களுக்கும் சாக்ஷியாயிருத்தலால் அவற்றின் வேறாய சத்வஸ்துவே இம்மகாவாக்கியத்தில் "துவம்" பதத்தினாற் சொல்லப்பட்டது. "அஸி" என்னும் பதத்தினால் ஏகத்துவம்(ஒருமை), கொள்ளப்படுகின்றது. ஆதலால் அவ்விரண்டுபதங்களின் பிரஹ்மாத்மவடிவ அர்த்தத்தின் பிரமாணசித்தஐக்கியம் முமுக்ஷுக்களால் அநுபவிக்கப்படுக. இதில் துவம்பதத்தின் அர்த்தமும், அஸிபதத்தின் அர்த்தத்தால் ஏகத்துவவடிவ வாக்கியார்த்தமும் சொல்லப்பட்டன. (சு)

ச. நான்காவது அதர்வணவேதத்தின் மாண்டூக்கியவுபநிஷத்திலுள்ள *"அயமாத்மா பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறும் சுருதி வருமாறு:—

---

* அயம் = இது. ஆத்மா = ஜீவசாக்ஷி. பிரஹ்மம் = வியாபகம்.

स्वप्रकाशापरोक्षत्वमयमित्युक्तितो मतम् ।
अहंकारादिदेहांतात्प्रत्यगात्मेति गीयते ॥ ७ ॥

(இ-ள்) அயம் (இஃது) என்னும் சொல்லால் சுவயம்பிரகாச அபரோக்ஷத்தன்மை சொல்லப்பட்டது. அகங்காரத்தை ஆதியாகவும் தேகத்தை யீருகவுமுடைய தத்துவங்களினும் பிரத்தியக்காய் அதாவது அதிஷ்டானத்தன்மையினுலும் சாக்ஷித்தன்மையினுலும் உள்ளாய் இருப்பது "ஆத்மா" என்று இம்மகாவாக்கியத்தில் சொல்லப்படுகின்றது.

அதிருஷ்டமாகிய தர்மாதர்மமுதலியவற்றிற்கிருப்பதுபோன்ற நித்தியபரோக்ஷத்தன்மையும் கடாதிகளுக்கிருப்பதுபோன்ற திருசிய(மற்ருென்ருல் பிரகாசிக்கப்படுந்தன்மையோடுகூடிய அபரோக்ஷ)த்தன்மையுமாகிய இவ்விரண்டு அநாத்மதர்மங்களையும் ஆத்மாவினின்றும் நீக்குதற்பொருட்டு மூலசுருதியில் "स्व. प्रकाश-சுவப்பிரகாசம்" "अपरोक्षत्वं-அபரோக்ஷத்துவம்" என்னும் விசேஷணங்கள் (அடைமொழிகள்) கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இதில் "அயம்" "ஆத்மா" என்னும் பதங்களின் அர்த்தம் சொல்லப்பட்டது. (எ)

Ʊக்தமிழ்ப்பண்டிதர்



दृश्यमानस्य सर्वस्य जगतस्तत्त्वमीर्यते ।
ब्रह्मशब्देन तद्ब्रह्म स्वप्रकाशात्मरूपकम् ॥ ८ ॥

(இ-ள்) திருசிய,த்தன்மையால் மித்தியாவடிவமான, சகலஜகத்திற்கும் தத்துவம் எதுவோ அதாவது அச்சகத்திற்கு அதிஷ்டானமாயிருத்தலாலும் பாதத்தின் மித்தியாத்துவ நிச்சயத்தின் எல்லையாயிருத்தலாலும் பாரமார்த்திக சச்சிதாநந்தலக்ஷணமான எவ்வடிவமிருக்கிறதோ, அது "பிரஹ்மம்" என்னும்சொல்லாற் செ லப்படுகின்றது. அந்தப் பிரஹ்மம் சுவப்பிரகாச மவடிவினதாம். அதுவே என்பது பொருள். இதனால் பிரஹ்மாத்மைக்கியம்சொல்லப்பட்டது. இச்சுருதியில் "பிரஹ்மம்" என்னும்பதத்தின் அர்த்தமும் ஐக்கியவடிவவாக்கியார்த்தமும் சொல்லப்பட்டன. ()

இங்ஙனம்

யஜுர்வேதசுகரஹஸ்யோபநிஷத்திலுள்ள
நான்குமகாவாக்கியார்த்தம்
முற்றுப்பெற்றது.
ஓம்தத்ஸத்பிரஹ்மணே நம: